கலை
இலக்கிய
மாத
சஞ்சிகை

245

கார்த்திகை
01.11.2024
100/-

# ஜீவநதி

பிரதம ஆசிரியர் : க.பரணீதரன்

ஜி.ஏ.கௌதம் / அல் அஸூமத் / ஜின்னாஹ் ஷரிபுத்தீன் / கே.எஸ்.சுதாகர் / ஶ்ரீரங்கன் /
இ.புஷ்பா / யாத்ராதாஸ் / கனகசபாபதி செல்வநேசன் / மபாஸ் / எஸ்.ஏ.கப்பார் /
அ.பௌநந்தி / த.ஜெயசீலன் / கந்தர்மடம் அ. அஜந்தன் / கோகிலா மகேந்திரன் /
வ.ந.கிரிதரன் / தமிழ்க்கசழ

# XXL சைஸில் தொடரும் பிரச்சனைகள்

ஜி.ஏ. கௌதம்



*அழகு என்பது வெள்ளை நிறத்தின்பால் பெரும்பாலும் வரையறுக்கப்பட்ட சமூகத்தில், கட்டுக்கோப்பான உடல் மட்டுமே ஆரோக்கியமான உடல் எனும் மாய பிம்பம் மக்களிடையே நிலவுகிறது. உலகெங்கும் பெண்களின் சாதனைகள் கொண்டாடப்படும் நிலையில், அவர்களின் உடல் சார்ந்த பிரச்சனைகள், எதிர்பார்ப்புகள் மற்றும் அதன் உளவியல் சிக்கல்கள் பெரிதாக பேசப்படுவதில்லை.*

*ஒரு நாளில் நீங்கள் சந்திக்கும் அத்தனை மனிதர்களில் குண்டான பெண்கள் எத்தனை பேரை சந்திக்கிறீர்கள் என உங்களால் நினைவில் கூற முடியுமா? முடியாது. அந்தளவுக்கு உங்கள் அலுவலகத்தில், வீட்டின் அருகில், சந்தையில், ஷாப்பிங் மாலில், தியேட்டர்களில் நீங்கள் நிறைய குண்டான பெண்களை பார்க்க முடிகிறது. சமகாலங்களில் நீங்கள் சந்திக்கும் நூறு பேர்களில் பத்து பேர் உடல் எடை அதிகம் கொண்டவர்களாக இருக்கிறார்கள்.*

*உலகில் 150 கோடிக்கும் அதிகமானவர்கள் உடல் பருமனால் பாதிக்கப்பட்டுள்ளதாகவும் அதில் 30 கோடி பேர் பெண்கள் எனவும் உலக சுகாதார அமைப்பு 2014 இல் அறிக்கை வெளியிட்டுள்ளது. 91 சதவீத பெண்கள் தங்களது உடலமைப்பு குறித்து வருத்தப்படுகிறார்கள்.*

*குண்டாக இருக்கும் பெண்கள் ஜவுளிக்கடையில் தங்களுக்கான உடைகள் கேட்க கூச்சப்படுவதை நாம் பார்த்திருக்கிறோம். அவர்கள் குண்டாக இருப்பதாலேயே அவர்களுக்குப் பிடித்தமான ஆடைகளைக்கூட தேர்ந்தெடுக்க முடியாமல் போகும் சூழல் சில சமயம் ஏற்படுகிறது. “சாரி மேடம். உங்க சைஸ்க்கு கிடைக்கல” என்று பணியாட்கள் தயங்கியபடி சொல்லும் போது அவர்களுக்கு உறுத்தலாகத்தான் இருக்கும். ஆனால், இவையனைத்தும் நம் உடல் பருமனாகும் வரையில் நமக்கு புரிவதில்லை.*

*வெளியில் செல்லும் இடமெங்கும் பார்க்கும் ஏளனப்பார்வை, தீண்டத்தகாதவர் போல தன்னை ஒதுக்கும் மக்களின் மனநிலை அவர்களிடையே ஏற்படுத்தும் உளவியல் மாற்றத்தை நினைத்துப்பார்ப்பதில்லை. சமூகத்தின் தவறான எண்ணம் மற்றும் ஊடகத்தின் தவறான பிரதிநிதித்துவம் முதல் சுய மதிப்புடனான தனிப்பட்ட போர்கள் வரை அவர்கள் தினமும் எதிர்கொள்ளும் பன்முக சவால்களை நாம் பார்க்கிறோம்.*

*அந்த வகையில், ஜூலியா க்வின் (Julia Quinn) என்ற எழுத்தாளரின் “Bridgerton” எனும்*



கேட்பது மட்டுமின்றி, வாளிப்பான பெண்களுக்கு மேலும் ஒரு வித நம்பிக்கையை அளிக்கிறது.

உருவகேலி என்பது நம்மூர் மட்டுமல்ல ஒட்டு மொத்த உலகையும் பீடித்திருக்கும் நோய். நம்மூரில் இருப்பது போல கறுப்பு, குண்டு, ஒல்லி, வெளிநாட்டினரின் உருவ அமைப்பு (சப்ப மூக்கன்) மீதான பாகுபாடுகள் உலகெங்கும் நிகழ்ந்து கொண்டு தான் இருக்கின்றன. இன்னோர் வகையில் அது கோழைத்தனத்தின் குறியீடு.

உங்களால் ஒரு ஏழை மாணவனை படிப்பில் வெல்ல முடியவில்லை என்றால், உங்கள் சிந்தனை முதலில் தேடுவது அவன் நிறத்தையும் அவனது பிற்படுத்தப்பட்ட வகுப்பையும் தான். அதை வைத்து அவனை கேவலப்படுத்தி சந்தோஷப்பட்டுக் கொள்வீர் கள். அதே வகையில் இந்த சமூகமும் பெண்கள் மீது கட்டமைத்திருக்கும் கட்டுப்பாடுகளை மீறும் போது "ஒழுக்கங்கெட்டவள்" என பெயர் சூட்டி மீண்டும் அவளை அதே வட்டத்திற்குள் இழுக்கப்பார்க்கிறது.

"இந்த உடம்ப வச்சிக்கிட்டு அவ்ளோ தூரம் எப்படி போவ?", "ஒல்லியா இருக்குற என்னாலயே முடில. உன்னால எப்படி முடியும்?", "எப்படி சாப்புடுறா பாரு! அளவா சாப்புடு. இல்லைன்னா, இன்னும் குண்டாகிடுவ" போன்ற கட்டுப்பாடுகளை உள் திணித்த கேலித் தனங்கள் பெண்கள் மீது மிகச்சுலமாக வீசப்படுகின்றன. குறிப்பாக திரைப்படங்களில்...

தமிழ் சினிமாவின் துவக்க காலம் தொட்டே பருமனானவர்களை (குறிப்பாக பெண்களை) கேலிக் குரிய விதத்தில் தான் சித்தரித்திருக்கிறார்கள். பாலையா சீ.கே. சரஸ்வதியை கேலி செய்வதில் தொடங்கி, என்.எஸ்.கிருஷ்ணா, தங்கவேலு முதல் கவுண்டமணி, விவேக், வடிவேலு, சந்தானம், சூரி, யோகிபாபு வரையிலும் இது தொடர்கிறது.

உதாரணமாக,

ஷங்கர் இயக்கத்தில் வெளியான காதலன் திரைப்படத்தின் "ஊர்வசி" எனும் பாடல் மிகப்பெறும் வெற்றி பெற்றிருந்தாலும், குண்டாக இருக்கும் பெண்ணிடம் "ஊசி போல உடம்பிருந்தா தேவையில்ல ஃபார்மஸி" என பாடுவார் ஒல்லியாக இருக்கும் பிரபு தேவா. இதே படத்தில் "காதலிக்கும் பெண்ணின்" என்ற பாடலில் "காதலுக்கு அன்னப்பட்சி தேவையில்லையே காக்கை கூட தூது போகுமே" எனும் வரியில் அருகில் கறுப்பாக இருக்கும் வடிவேலுவை விரல்நீட்டி காண்பிப் பார் பிரபுதேவா.

இப்படியாக, அவர்கள் நடக்கும் போது பின்னால் யானையின் சப்தத்தை ஒலிக்க விடுவது. அவர்களை எருமை, பன்றி, யானை போன்ற பருமனான விலங்கு களுடன் ஒப்பிட்டு பேசுவது. காட்சிகளை அமைப்பது, மலை போல குவிந்திருக்கும் உணவை சாப்பிடுவது போன்ற திரைப்பட காட்சிகள் வழியே, அவர்களை சக மனிதர்களின் வாழ்விலிருந்து அறுபட்ட ஏலியன்

நாவல் தொடரை அடிப்படையாகக் கொண்டு அதே பெயரில் தயாரிக்கப்பட்ட நெட்ஃபிக்ஸ் தொடரை இங்கு குறிப்பிட வேண்டும்.

ஜீரோ சைஸ் என்று சொல்லக்கூடிய ஒல்லி யான பெண்களின் உடற்கட்டைக் கொண்ட நாயகிகள் மட்டுமே திரைப்படங்கள், மியூசிக் வீடியோக்கள் என அனைத்து விதமான பொழுதுபோக்கு அம்சங்களுக்கும் ஏற்றவர்கள் என்ற பெண்கள் மீது கட்டியெழுப்பிய பிம்பத்தை, தகர்த்து எறிந்திருக்கிறது இந்தத்தொடர்.

ஆடம்பரமான ஆடைகள், அரண்மனைகள், சிக்கலான காதல் கதைக்களங்கள் மற்றும் கலையமைப்பிற்காக இந்தத்தொடர் பேசப்பட்டாலும், பருமனான உடல் கொண்ட "பெண" எனப்படும் "பெனிலோப்" கதாபாத்திரம் (நிகோலா காஃப்மேன்) வடிவமைத்த விதம் இதில் மிக முக்கியமானது. ஒல்லியான மற்றும் இறுக்கி அணியும் ஆடைகள் கொண்ட இங்கிலாந்து மன்னர்கள் குடும்பத்தில் ஒரு வாளிப்பான பெண்ணை பொருத்துவது என்பது சற்றே வித்தியாசமான சிந்தனை.

தன்னை சூழ்ந்திருப்பவர்கள் தன் பருமனான உடலை காரணம் காட்டி அலைக்கழிப்பதன் மூலம் ஏமாற்றமடையும் பெண், அவளின் முழு நம்பிக்கையை பெற்ற கோலின் மீது பிரியம்கொள்ளத் துவங்குகிறாள். ஆடைகளற்ற அவளது வாளிப்பான உடலின் அழகை ரசிக்கத்துவங்குகிறான் கோலின். இதுவரை தன் உடலை கிண்டலாக பார்த்த மனிதர்களுக்கு நடுவில், அதிலிருக்கும் அழகை காணும் கோலினை கண்டு வியப்புறுகிறாள்.

ஆணோ, பெண்ணோ தன்னைத்தானே குறை பட்டுக்கொள்ளும் அழகு / உடல்/ நிறம்/ பொருளாதார நிலை என ஏதேனும் ஒன்றின் மீதிருக்கும் பயம் என்பது, அதை காரணம் காட்டி நம்மை விலக்கி விடுவார்களோ என்ற தயக்கம் தான். ஒருவேளை அதை பொருட்டா கவே எடுத்துக்கொள்ளாமல் அந்த பயத்தை நீக்கும் ஒரு துணை கிடைத்தால் அதை விட வேறு என்ன வேண்டும்!

பருமனான அனைத்து பெண்களும் எதிர்பார்ப்ப தெல்லாம் எந்த நிலையில் தான் இருந்தாலும், எவ்வித பூச்சுமின்றி தன்னை விரும்பும் கோலின் போன்ற ஒருவனைத்தான். இதனால், இத்தொடர் பெண்கள் மீது நிகழ்த்தப்படும் உடல் சார்ந்த ஒடுக்குமுறையை கேள்வி

களைப்போல காண்பிக்கப்படுகிறார்கள்.

"மதனகோபால்" என்ற கதாப்பாத்திரத்தில் கே.பாக்யராஜ் நடித்து இயக்கிய "சின்னவீடு" திரைப் படத்தில், தனக்கு வர வேண்டிய மணப்பெண்ணை அத்தினி, சித்தினி, பத்தினி என வகைப்படுத்தி நடிகை களின் புகைப்படங்களை கத்தரித்து உடல் வடிவமைப்பில் எப்படி இருக்க வேண்டும் என்று மனதில் கோட்டை கட்டி வைத்திருப்பார். ஆனால், அவருடன் திருமணம் நிச்சயமாகும் நாயகி "பாக்யலட்சுமி" (கல்பானா) மதனை விட அதிகம் படித்திருந்தும், நல்ல வசதியான குடும்ப பிண்ணனியில் இருந்தும் சரியாக படித்தே முடிக்காத பாக்யராஜூக்கு திருமணம் செய்து வைப்பார்கள். அவருக்கு நல்ல வேலையையும் கூட பெண் வீட்டார் பார்த்து வைப்பார்கள். அதற்கேற்றாற் போல மதனும் பாக்யலட்சுமியிடமும், அவர்கள் குடும்பத் தாரிடமும் ஏதோ அவர் தான் மணப்பெண்ணுக்கு வாழ்க்கை கொடுத்தது போல ஓரவஞ்சனையாக நடந்து கொள்வார். காராணம் நாயகி பாக்யலட்சுமி உடல் பருமனாக இருப்பார்.

மதன் எதிர்பார்த்ததற்கு மாறாக பாக்யலட்சுமி உடல் பருமனாக இருப்பதால், ஒரு குண்டான பெண்ணின் கணவராக தன்னை வெளிப்படுத்திக் கொள்ள விரும்ப மாட்டார் மதன். அதன் விளைவாக வெளியில் செல்லும் போது கூட விலக்கி வைத்தே கூட்டிச்செல்வது, திரையரங்க இருக்கையில் அருகில் உட்கார யோசிப்பது என சொந்த கணவனால் மனதள வில் நசுக்கப்படுவார் கல்பனா. ஆனால், உடல் ஒரு பொருட்டல்ல என்பதை அவர் புரிந்துகொள்ள ஒல்லி யான ஒரு பெண்ணிடம் ஏமாந்து போக வேண்டிய சூழல் வருகிறது.

கிட்டத்தட்ட, இதே கதைக்களத்தில் இதன் பின்னால் இரண்டு திரைப்படங்கள் வெளியாகிவிட்டன. ஒன்று, தமிழில் பாலுமகேந்திரா இயக்கத்தில் வெளி யான "சதி லீலாவதி", இரண்டாவது இந்தி மொழியில் 2015ஆம் ஆண்டு வெளியான "தும் லகா கே ஹைஷா". கிட்டத்தட்ட இரண்டு படங்களும் ஒரு வகையில் "சின்ன வீடு" திரைப்படத்தின் சாயலில் தான் இருக்கிறது. இந்திப்படத்தில் மட்டும் கொஞ்சம் மாற்றாக, அரசு வேலைக்கு தேர்வாகாத பிரேமுக்கு (ஆயுஷ்மான் குரானா) தன்னை விட அதிகம் படித்த சந்தியாவை (பூமி பட்னேக்கர்) திருமணம் செய்து வைக்கிறார்கள்.

ஆனால், சதிலீலாவதியில் திருமணத்திற்கு பிறகிலிருந்து துவங்குகிறது கதை. உடல் பரு மனாக இருக்கும் லீலாவை விட (கல்பனா) ஒல்லியாக இருக்கும் ப்ரியாவை (ஹீரா) விரும்புகிறார் அருண் (ரமேஷ் அரவிந்த்). இத்தனைக்கும், லீலா கதா பாத்திரத்தில் நடித்ததும் "சின்ன வீடு" திரைப்படத்தில் நடித்த அதே கல்பனா தான்.

தமிழ் சினிமாவில் மோச மான வழக்கம் ஒன்று இருக்கிறது. எது வெற்றியடைகிறதோ எல்லோரும் அதன் பின்னாலேயே ஆட்டு மந்தை போல ஓடுவார்கள். உதாரணத்திற்கு, "பருத்தி வீரன்" படத்தின் வெற்றிக்குப் பின்னால் சுப்ரமணியபுரம், நாடோடிகள் என்ற இரு படங்களின் மாபெரும் வெற்றியும் இணைந்துகொள்ள, அடுத்த சில ஆண்டுகள் வெளியான எல்லா திரைப்பட போஸ்டர்களிலும் ரவுடித்தனம் செய்து தரிகெட்டுத் திரியும் நாயகனும், அவரை திருத்தும் அப்பாவி கதா நாயகியும் நிறைந்திருந்தார்கள். உதாரணமாக: மதுரை சம்பவம், கோரிப்பாளையம், மதயானைக்கூட்டம்... இன்னும் பல. "நீங்க ரொம்ப கோவமா பேசுறீங்களே. மதுரையா?" என யாரேனும் நிச்சயம் ஒரு முறையாவது உங்களிடம் கேட்டிருப்பார்கள்.

அது போல, ஒருவர் மருத்துவர் கதா பாத்திரத் தில் நடித்த திரைப்படம் மாபெரும் வெற்றியடைந்து விட்டால், உடனே அவர்களுக்கு அடுத்து வரும் அத்தனை பட வாய்ப்புகளும் மருத்துவர் கதாப்பாத்திரத் திற்கே வரும். பல திரைப்படங்களில் காவல் துறை அதிகாரிகளாக ஒரே நடிகர் நடிப்பதை நீங்கள் கவனிக்கலாம்.

ரஜினியின் "தில்லு முல்லு" திரைப்படத்தில் வரும் "குண்டு கல்யாணம்" என்ற ஒரு நடிகருக்கு, அவர் குண்டாக இருப்பதால் பல திரைப்படங்களில், உடல் பருமனை காரணம் காட்டி நகைச்சுவை காட்சிகள் அமைக்கப்பட்டிருக்கும்.

கறுப்பான பெண்களை தொடர்ந்து ஒடுக்கப் பட்ட மக்களின் கதாபாத்திரங்களுக்காகவும், உடல் பருமனான பெண்களை தொடர்ந்து நகைச்சுவைக்காக வும், முற்போக்காக செயல்படும் சிலரை தொடர்ந்து இடதுசாரி கதாபாத்திரங்களில் நடிக்க வைப்பது என இன்றளவும் தொடர்கிறது.

அந்த வகையில், "சின்ன வீடு" கல்பனாவை "சதி லீலாவதி" திரைப்படத்தில் நடிக்கவைத்ததில், "மாஸ்டர்" என்று சொல்லக்கூடிய இயக்குநர் பாலு மகேந்திராவும் அந்த வழியை பின்பற்றியிருக்க மாட்டார் என்று நம்புகிறேன்.

"அவளுக்கென்ன ஒரு வேலையும் செய்ய மாட்டேங்க்றா. திண்ணுட்டு திண்ணுட்டு தூங்குறா. அப்புறம் குண்டாகாம என்ன செய்யும்?" என



அலைபேசியை பார்த்துக்கொண்டிருக்கும் தனது மகளைப்பார்த்து பெண்களின் தாய்மார்கள் புலம்புவதை நீங்கள் பார்த்திருக்கலாம். எந்த வேலையும் செய்யாமல் இருப்பவர்கள் தான் குண்டாக இருப்பதாகவும், ஓடியாடி வேலை செய்பவர்களுக்கு உடல் பருமன் ஏற்படாது எனவும் புரிந்துகொள்ளப்படுகிறது.

ஆனால் "சின்ன வீடு" திரைப்படத்தில் வரும் கல்பனா, வீட்டிலிருக்கும் அத்தனை வேலைகளையும் இழுத்துப்போட்டு செய்துகொண்டு தான் இருப்பார். பார்ப்பதற்கு நமக்கே பாவமாக இருக்கும். கல்பனா குண்டான பெண் என்பதால் அவர் மீது ஆதிக்கம் செலுத்துவார் ஒல்லியான மாமியார் (கோவை சரளா). பெரும்பாலான குடும்பங்களில் உடல் பருமனாக இருப்பவர்களிடம் அதை காரணமாக சொல்லி மறைமுகமாக பல மடங்கு வேலை வாங்குவதும் தொடர்கிறது.

அதே சமயம், அதிகம் உண்பவர்கள் குண்டாக இருப்பார்கள் என்ற சித்தாந்தமும் இங்கு நிலவுகிறது. உதாரணமாக, "வெண்ணிலா கபடிக்குழு" திரைப் படத்தின் ஒரு காட்சியில் புரோட்டா சாப்பிடும் போட்டியின் அறிவிப்பை தனது கபடி நண்பர்களுடன் பார்க்கும் சுப்ரமணி (சூரி) தானும் பங்கேற்க கேட்பார். அவர்கள் குழுவில் பருமனாக இருக்கும் "ஐயப்பன்" என்பவரை சுட்டிக்காட்டி "இவனைத்தவிர்த்து, யார் வேண்டுமானாலும் கலந்துகொள்ளலாம்" என்று சொல்வார் அந்த புரோட்டா மாஸ்டர். ஆனால், போட்டியில் கலந்துகொள்ளும் ஒல்லியாயான சூரி தான் அதிகமான புரோட்டாவை சாப்பிடுவார். அதிலிருந்து "புரோட்டா சூரி"யாக மாறினார். இப்போது மீண்டும் "சூரி"யாகி விட்டார்.

அந்த வகையில் மொத்தமாக உணவுப் பழக்கவழக்கங்களால் மட்டுமே நடைபெறுவதில்லை. மருத்துவம் சொல்வது காரணங்கள் வேறு.

உடல் பருமனுக்கு முதன்மைக் காரணமாக உடல் இயக்கமின்மை, துரித உணவுகளை அதிகமாக உட்கொள்வது, உடற்பயிற்சி செய்ய முற்படாதது, அதிகப்படியான மது அருந்துதல், சர்க்கரை மிகுந்த பானங்கள் அருந்துதல் ஆகியவற்றின் மூலம் உடலில் கொழுப்பு படியத்துவங்கி உடல் எடை கூடுவதாக மருத்துவம் சொல்கிறது.

ஆனால், மேல்குறிப்பிட்ட எந்த பழக்கங்களும் இல்லாமல், அதிகம் சாப்பிடாமல் குண்டாக இருக்கும் நண்பர்களை நிச்சயம் உங்கள் பள்ளி, அல்லது கல்லூரி காலம் கொண்டிருக்கும். இதனால் தான் குண்டாக இருப்பதை வெறுக்கும் எண்ணம், பள்ளிக்கூட மாணவி களிடம் காணப்படுகிறது. குண்டாக இருக்கும் மாணவிகள், சக மாணவர்களின் கேலி கிண்டல்களுக்கு பயந்துகொண்டே பெரும்பாலும் பள்ளிக்கூடம் வருவதை தவிர்க்க விரும்புவதாக ஆய்வறிக்கை தெரிவிக்கிறது.

சில பெற்றோர்கள் குண்டாக இருக்கும் பெண் குழந்தைக்கு தேவையான அளவு உணவை கொடுக்கா மல், குறைவாக கொடுப்பார்கள். ஆனால், எங்கே அதிகம் சாப்பிட்டால் இன்னும் குண்டாகி விடுவோமோ என நினைத்து அதையும் சரியாக சாப்பிடாமல் பாதி சாப்பாட்டை என் தட்டத்தில் கொட்டிய பள்ளித் தோழியை இப்போது என்னால் புரிந்துகொள்ள முடிகிறது.

இது ஒரு புறமென்றால், "என்ன தான் சாப்பிட்டா லும் ஒல்லியாகவே இருக்கிறேன். உடல் பெருக்க மாட்டேன்கிறது" என சிலர் குறைபட்டுக் கொள்வார்கள். காரணம், "ஒல்லிக்குச்சி" என்ற பட்டப் பெயருக்கு பயந்து தான். "இந்தப்பொண்ணு ஏன் இவ்ளோ ஒல்லியா இருக்கு? வீட்ல சாப்பாடே போடுறதில்லயா?" என கேலியும் கிண்டலுமாக நாமுமே ஒரு காலத்தில் பேசியிருப்போம்.

"நல்லி எலும்பு என்று நினைத்து நாய் தூக்கிக்கொண்டு போய்விடப்போகிறது" என்று விவேக் பேசும் காமெடி உட்பட மனோபாலா உள்ளிட்ட ஒல்லி யான பலரை நகைச்சுவைகாட்சிகளில் தமிழ் சினிமா பயன்படுத்தியதுண்டு.

மருத்துவ ரீதியாக பார்த்தால், அதிகம் சாப்பிடாமல் இருப்பவர்கள் குண்டாக இருப்பதற்கும், அதிகம் சாப்பிடுபவர்கள் ஒல்லியாக இருப்பதற்கும் நிறையவே வாய்ப்புள்ளது. சிலருக்கு பெற்றோரின் மரபணு (டி.என்.ஏ) சார்ந்த உடலமைப்பும், சிலருக்கு வியாதிகளுமே கூட தலைமுறை கடந்து தொடரும். (உதாரணம்: சர்க்கரை நோய்) இதனால் தான் அப்பாவைப்போலவே உடல் பருமனுடன் இருக்கும் மகன்களை நாம் பார்க்க முடிகிறது. அது போலத்தான் பெண்களும்.



அதையும் தாண்டி சிலருக்கு depression என்று சொல்லக்கூடிய மன அழுத்தத்தின் மூலமும் உடல் எடை கூட வாய்ப்புள்ளதாக மருத்துவ அறிவியல் சொல்கிறது. சிலருக்கு கொஞ்சம் உடல் கூடினால்

கூட அதை பார்த்து கவலை கொள்வதன் மூலம், இன்னமும் உடல் எடை கூடி விடுவதற்கு வாய்ப்பாகி விடுகிறது.

குறிப்பாக இரவு அதிக நேரம் கண் விழித்து வேலை செய்பவர் களுக்கு உடலின் ஹார்மோன்களில் ஏற்படும் மாற்றங்கள் பெரிய பிரச்சனைகளை பின்னாளில் கொண்டு வரும் என்பதை எச்சரிக்கிறார்கள் மருத்துவர்கள். தைராய்டு நோய் காரணமாகவும் ஹார்மோன் அளவு களில் சீரற்ற நிலை தோன்றுவ தாலும் உடல் எடை அதிகரிக்க வாய்ப்புகள் உள்ளன.




என்ன தான் காரணங்கள் பல அடுக்கினாலும், குண்டான பெண்கள் திருமணச் சந்தையில் என்றைக்குமே புறக்கணிப்படு கிறார்கள்.

பண வசதி படைத்தவர்கள் "சின்ன வீடு" திரைப்படத்தைப் போல, எப்படியோ பெரும் தொகையினை வரதட்சணையாக கொடுத்து பெண்ணை ஏதோ ஒரு இடத்தில் கட்டி வைத்து தன் கடமை முடிந்ததாக பெருமூச்சு விட்டுக்கொள் கிறார்கள். ஆனால், வசதி இல்லாத குடும்பங்களின் நிலை தான் இன்னும் மோசமானது.

உடல் பருமனான பெண்களின் பொருந்தாத துணையுடனான பாலியல் வாழ்க்கை மிகக்கொடுமையானது. அவர்களது பருமனான உடல் ஒத்துழைக்காத நிலையில் பாலியல் செயல்பாடுகளுக்கு தடையாக மாறி, விரும்பிய நிலைகளில் உறவு வைத்துக்கொள்ள முடியாமல் போகிறது. இதனால் அவர்களுக்கு காமத்தின் மீது சலிப்பும், விரக்தியும் தோன்றுகிறது. வீட்டில் தான் இந்த நிலை என்றால் அரசும் இப்படித்தான் இருக்கிறது.

செப்டெம்பர் 2015-ம் ஆண்டு, இந்திய அரசின் "ஏர் இந்தியா" விமான சேவை நிறுவனம் 125 விமானப் பணிப்பெண்களையும், உடன் பணியாற்றும் சிலரையும் அதிக உடல்பருமன் காரணமாக அப்பணிகளிலிருந்து நீக்கப்போவதாக அறிவித்தது.

உடல் எடையை குறைத்துக்கொள்ளுமாறு 600 பணியாளர்களை ஏற் கனவே எச்சரித்தும், அவர்களில் 125 பேர் கேட்கப்பட்ட அளவுக்கு எடையை குறைக்கவில்லை என "பிஸ்னஸ் டுடே" இதழில் அதிகாரியொருவர் குறிப்பிட்டிருக்கிறார்.

காரணம் கேட்டால், உடலை கட்டுக்கோப்பாக வைத்துக்கொள்ளாத விமானப் பணியாளர்களால் அவசர நிலைமைகளின்போது வேகமாக இயங்க முடியாமல் போகலாம் என கணிக்கிறார்களாம்.

அப்படியென்றால், அரசு அலுவலகங்களில் வெற்றிலை பாக்கு போட்டுக்கொண்டு நாற்காலிகளை தேய்த்துக் கொண்டிருக்கும் எத்தனையோ அரசு ஊழியர்களை இந்த அரசு என்ன செய்துவிட்டது?

ஒரு பெண்ணை அவள் உடல் சார்ந்து விமர்சிப்பதோ, திருமணத்தில் நிராகரிப்பதோ தவறு என்பதை மட்டும் புரிந்துகொள்ள வேண்டிய புரிதலை உண்டாக்க வேண்டியுள்ளது.

ஏனெனில், சிறுவயதிலிருந்தே உடல் பருமனாக இருப்பவர்களை கேலியும், கிண்டலும் செய்வதை பார்த்து வளரும் ஒரு தலை முறையும் வளர்ந்த பிற்பாடு அதையே தான் தொடரும்.

எனவே அடுத்த தலைமுறைக்கு இனி வரப் போகும் உடல் சார்ந்த பிரச்சனைகளை எடுத் துரைக்க வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறோம். இல்லையேல் Fling, cuffing, Situationship, Delaytionship, காதல், திருமணம் போன்ற உறவுகளில் நிச்சயம் உளவியல் ரீதியாகவும், உடல் ரீதியாகவும் பெரும் பிளவுகள் ஏற்பட வாய்ப்புள்ளது. அதைவிட, குண்டாக இருப்பது அசிங்கம் என்ற மனநிலை மக்களிடத்தில் இருக்கும் வரை தான் அதைச்சார்ந்த வணிகமும் மருத்துவமும் சுழலும். தற்போது வரை, உடல் எடை குறைப்பதற்கு மட்டும் மருந்துகள், அறுவை சிகிச்சை, உடற்பயிற்சிக்கூடங்கள், சொற்ப நாட்களில் உடல் எடையை குறைக்க தன்னிடம் சிகிச்சை முறை இருப்பதாக சொல்லும் போலி மருத்துவர்கள் என பல்லாயிரக்கணக்கான கோடிகளில் புரளும் ஒரு பெரும் வணிகம் இதைச்சார்ந்து மட்டுமே நிகழ்ந்துகொண்டிருக்கிறது. நாம் விழித்துக்கொள்ளும் வரை இவர்கள் கல்லாவில் பணம் குவிந்துகொண்டே தான் இருக்கும்.

உடல் எடை கூடுவது என்பது ஒரே இரவில் நிகழாத போது, மாயாஜாலம் போல ஒரே நாளில் உடல் எடையை குறைப்பது மட்டும் எப்படி சாத்தியமாகும் என்பதை நாம் புரிந்துகொள்ள வேண்டும். ரஜினி சொல்வது போல "உடனடியாக எதுவும் கிடைக்காது. அப்படிக்கிடைத்தால் அது நிலைக்காது."

ஒல்லியாக இருக்கிறோமா, குண்டாக இருக்கிறோமா என்பதை விட நாம் நல்ல உடல்நலத்துடனும், நல்ல மனநலத்துடனும் ஆரோக்கியமாக இருக்கிறோமா என்பது தான் அனைத்திற்கும் முதன்மையானது. ஏதோ ஒரு பெயரில் தொடர்ந்து உங்களை எடை போட்டுக் கொண்டே இருக்கும் இந்த சமூகத்திற்கு நீங்கள் எதையும் நிரூபிக்கத் தேவையில்லை.

கலை இலக்கிய மாத சஞ்சிகை
2024 - கார்த்திகை (01.11.2024)

# பொருளடக்கம்

சிறுகதைகள்

அல் அஸுமத் – 08
ஜின்னாஹ் ஷரிபுத்தீன் – 17
கே.எஸ்.சுதாகர் – 21
ஸ்ரீரங்கன் – 27
புஷ்பா – 30



கவிதைகள்

யாத்ரா தாஸ் – 16
கனகசபாபதி செல்வநேசன் – 16
மபாஷ் – 20
கந்தர்மடம் அ.அஜந்தன் – 20
அ.பௌநந்தி – 25, 41
த.ஜெயசீலன் – 26
எஸ்.ஏ.கப்பார் – 29



தொடர் நாவல்

வ.ந.கிரிதரன் – 34
தமிழ்க்கவி – 41

கட்டுரைகள்

XXL சைஸில் தொடரும் பிரச்சனைகள்
ஜி.ஏ.கௌதம் – 03



**முடிவைத்தொடுவாய் முயன்று** - 11
கோகிலா மகேந்திரன் – 32

# ஜீவநதி

**2024 கார்த்திகை இதழ் – 245**





**தொடர்புகளுக்கு :**
கலை அகம்
சாமணந்தறை ஆலடிப்பிள்ளையார் வீதி
அல்வாய் வடமேற்கு
அல்வாய்
இலங்கை.





**தொலைபேசி** : 0775991949
0212262225

**E-mail** : jeevanathy@yahoo.com

**வங்கித் தொடர்புகள்**
K.Bharaneetharan
Commercial Bank, Nelliady
A/C - 8108021808 - CCEYLKLY





ஜீவநதி சந்தா விபரம்

தனிப்பிரதி – 100/= ஆண்டுச்சந்தா – 3000/=
வெளிநாடு – $ 100U.S
மணியோடரை
அல்வாய் தபால் நிலையத்தில்
மாற்றக்கூடியதாக அனுப்பி வைக்கவும்.
அனுப்ப வேண்டிய பெயர்/முகவரி
**K .Bharaneetharan,**
**Kalaiaham ,**
**Alvai North west, Alvai.**
வங்கி மூலம் சந்தா செலுத்த விரும்புவோர்
K.Bharaneetharan Commercial Bank - Nelliady Branch
A/C No.- 8108021808 CCEYLKLY





# ஜீவநதி
**(கலை இலக்கிய மாத சஞ்சிகை)**


அறிஞர் தம் இதய ஓடை
ஆழ நீர் தன்னை மொண்டு
செறி தரும் மக்கள் எண்ணம்
செழித்திட ஊற்றி ஊற்றி...
புதியதோர் உலகம் செய்வோம்.!
– பாரதிதாசன்–

## ஜீவநதி பதிப்பகத்தின் சாதனை

ஜீவநதி சஞ்சிகையுடன் இணைந்ததாக ஜீவநதி பதிப்பகம் மூலம் ஜீவநதி வெளியீடாக படைப்பிலக்கியத்துக்கு முன்னுரிமை கொடுத்து நூல்கள் வெளி வந்த வண்ணமுள்ளன. ஐப்பசி மாதம் நூலக மாதமாக கொண்டாடப்பட்டு வருகின்றமை அனைவரும் அறிந்ததே. ஐப்பசி மாதத்தை சிறப்பிக்கும் வகையில் ஈழத்து இலக்கிய வரலாற்றில் முதன் முதலாக ஒவ்வொரு நாளும் ஒரு நூலை வெளியிட்டு ஜீவநதி சாதனை படைத்துள்ளது. இவற்றில் கட்டுரைத் தொகுதிகள் – 13 , சிறுகதைத் தொகுதிகள் – 5, நேர்காணல் தொகுதிகள் – 2, கவிதைத்தொகுதிகள் – 3, வாய்மொழி வரலாறு – 3, நாடகத் தொகுதிகள் – 3, குறுநாவல் – 1, விமர்சனம் – 1 என்பன அடங்குகின்றன. ஈழத்தில் தொடர்ச்சியாக படைப்பிலக்கியத்துக்கு முன்னுரிமை கொடுத்து நூல்களை வெளியீடு செய்யும் ஜீவநதிப் பதிப்பகம் ஈழத்து எழுத்தாளர்களுக்கு தன்னாலான உதவிகளையும் செய்து வருகின்றது. பல்வேறு எழுத்தாளர்களது நூல்களை பதிப்பித்து அவர்களது புத்தகங்களை விற்பதிலும் வெளியீட்டு விழா செய்து கொடுப்பதிலும் தொடர்ச்சியாக ஈடுபட்டு எழுத்தாளர்களது சிரமங் களைக் குறைத்து வருகின்றது. ஜீவநதிப்பதிப்பகத்தின் மூலம் வெளி வந்த பல்வேறு நூல்கள் விருதுகளைப் பெற்றும் சாதனை படைத்துள்ளன. இவற்றிற்கொல்லாம் காரணமான படைப்பாளர்கள், வாசகர்களை ஜீவநதி நன்றியோடு நினைத்துக் கொள்கின்றது. இந்த ஆண்டு(2024) இதுவரையில் 103 புத்தகங்களை வெளியிட்டும் ஜீவநதி சாதனை படைத்துள்ளது. யாராலும் அழிக்க முடியாத சொத்தாக நூல்களே விளங்குகின்றன. அறிவைத்தரும் இந்த நூல்களை தளராது ஜீவநதிப் பதிப்பகம் வெளியிட்டுக் கொண்டே இருக்கும். பயன் பெறக்கூடியவர்கள் பயன்களைப் பெற்றுக் கொள்ளுங்கள். அத்துடன் வாய்மொழி வரலாறுகள் ஒரு பதிப்பகத்தின் ஊடாக வெளிவருவதும் இதுவே முதல் தடவையாக இருக்கும் என நம்புகின்றோம். எல்லாவற்றிற்கும் மேலால ஈழத்தின் பல்வேறு பாகங்களிலும் உள்ள தமிழ் பேசும் மக்களது படைப்புகளை நூலாக்கம் செய்து வருவது கூட ஜீவநதி பதிப்பகத்தின் இன்னொரு புதுமை எனச் சொல்லலாம். இவையெல்லாம் சுய புழுகு அல்ல, காலவெள்ளத்தில் இருட்டடிப்புகள் நிகழ வண்ணம் இருப்பதற்கான பதிவே.

– க. பரணீதரன்


ஜீவநதி கிடைக்கும் இடங்கள்/ விற்பனையில் உதவுவோர்

1. புத்தகக்கூடம் - திருநெல்வேலி
2. பூபாலசிங்கம் புத்தகசாலை - யாழ்ப்பாணம், கொழும்பு செட்டித்தெரு
3. புத்தகப்பண்பாட்டுப் பேரவை, 68, நீதிமன்ற வீதி, மல்லாகம்
5. பண்டாரவன்னியன் புத்தகசாலை - வவுனியா
4. அ.யேசுராசா
5. பரணி புத்தகக்கூடம் - நெல்லியடி
6. மு.யாழவன்- திருகோணமலை,
7. கந்தர்மடம் அ.அஜந்தன்
8. சி.ரமேஷ்
9. நா.நவராஜ்




